නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

බෞද්ධ ශිෂ්ටාචාරය I
பௌத்த நாகரிகம் I
Buddhist Civilization I

45 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** பிராமண மரபில் முக்கியமான சமயச் சடங்கான யாகத்தின் போது வேதங்களை ஓதுபவர் எப்பெயரால் அழைக்கப்படுவார்?
(1) ஹோத்ரு (2) அத்வர்யு (3) உத்காத்ரு
(4) யக்ஞகாரகர் (5) யக்ஞம் பெறுபவர்

**2.** பிராமண போதனையின்படி சந்நியாச ஆசிரிமத்தின்போது ப்ரஹ்மஸஹவ்யாதவை அடைவதற்கான முக்கியமான செயலாகக் கூறக் கூடியதாயுள்ளது,
(1) காட்டில் வாழ்தல்
(2) தோத்திரங்களைப் பாடுதல்
(3) வேதங்களைக் கற்றல்.
(4) கிரியைகள் செய்தல்
(5) சமய தர்மத்திற்கு அமைய வாழ்க்கையை நடாத்துதல்

**3.** புத்தர் காலத்தில் பிரசித்திபெற்ற ஆசிரியர்களினது சமய, தத்துவ கருத்துக்கள் சில கீழே காட்டப்பட்டுள்ளன.
A - ஒருவரின் (சத்தா) தூய்மை, அசுத்தம் என்பவற்றுக்கு ஏதுவாக எதுவும் இல்லை.
B - பதவி, ஆபோ, தேஜோ, வாயோ, சுக, துக்க, ஜீவ என அழிக்க முடியாததும் என்றும் நிலைத்துள்ளதுமான ஏழு பதார்த்தங்கள் உள்ளன.
C - எல்லா சத்தாக்களும் (பிராணிகளும்) பலமற்றனவாகவும் வீரியமற்றனவாகவும் சக்தி அற்றனவாகவும் உள்ளன.
D - கொடுக்கப்படும் பொருட்களால் பயன் இல்லை. யாகத்தினாலோ குசலாகுசல செயல்களினாலோ பயன் இல்லை.
E - (சதுயாம ஸங்வரத்துடன்) நான்கு வகை அடக்கமுடைமையினால் விடுதலை பெற முடியும். முன் செய்த கர்மங்களைக் கழித்தலினாலும் புதிய கர்மங்களை சேர்க்காதிருத்தலினாலும் மோக்ஷத்தைத் தொட முடியும்.
மேலேயுள்ள கூற்றுக்களில் மக்கலீ கோசலரின் இரண்டு போதனைகள் அடங்கிய கூற்று எது?
(1) A, B (2) A, C (3) B, C (4) C, D (5) D, E

**4.** கொடை வழங்குவதனாலோ இந்திரியங்களை அடக்குவதனாலோ உண்மை வார்த்தைகளைப் பேசுதலினாலோ உண்டாவது புண்ணியம் அல்லவென்று அகிரியாவாதத்தைப் போதிக்கும் புத்தர் காலத்து ஆசிரியராயிருந்தவர்,
(1) நிகண்ட நாத புத்த (2) அஜித கேஸகம்பல (3) ஸஞ்சய பெல்லட்டி புத்த
(4) பூரண கஸ்ஸப (5) பகுத கச்சாயன

[பக். 2 ஐப் பார்க்க

5. புத்தர் காலத்து இந்தியாவில் ஆட்சியாளர்களுக்கும் புத்தருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததாக வரலாற்று மூலாதாரங்கள் விளக்குகின்றன. அவர்களுள் பஸேனதீ கோசல மன்னனனுக்கு முக்கிய இடம் உள்ளது. இதனை நிரூபணம் செய்யும் மிகச் சிறந்த நிகழ்வானது,
(1) வேலுவநாராமவில் பூஜை செய்தல்
(2) அரச படைகளைப் பவிதி(சமயநிலைப்படுத்தல்) செய்ய வேண்டாம் எனும் கோரிக்கை
(3) உபோசத கர்மத்திற்கு அனுமதியளிக்கக் கோரியமை
(4) திரோகுட்ட சூத்திரத்தைப் போதித்தமை
(5) கோசல ராச்சியத்தில் அதிக மழைக்காலங்களிலும் வாழ்ந்து வந்தமை

6. விவசாயத்தை ஜீவனோபாயமாக முதன்மைப்படுத்தும் புத்தசமயம், ஆட்சியாளர்கள் விவசாயிகளுக்கு விதை முதலானவற்றை வழங்கி தேவையான வசதிகளை செய்து கொடுத்து அவர்களுக்கு ஆதரவு வழங்கவேண்டுமென்று .............................. சூத்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது
(1) குடதந்த (2) கசீபாரத்வாஜ (3) அக்கஜ்ஜ
(4) சக்கவத்தி ஸீகநாத (5) தனிய

7. இந்தியாவில் புத்தர் காலத்தில் பௌத்தமதம் பெண்களுக்குப் பெற்றுக் கொடுத்த சமய சுதந்திரத்தை நிரூபிக்கும் மிகச் சிறந்த அம்சத்தினை தெரிவுசெய்க.
(1) உபாசிகைகளுக்குப் பதவி வழங்கியமை
(2) தாயை 'ப்ரஹ்ம' எனும் பெயர் கொண்டு அழைத்தமை
(3) நிர்வாண அறிவுக்கு பெண்கள் பாதிப்பாக அமைவதில்லை என எடுத்துக் கூறியமை
(4) பிக்குணீ சாசனத்தைத் தாபித்தமை
(5) பிக்குணிகளுக்குச் சாசனப் பதவி வழங்கியமை

8. பவ ஹததறின் எதர
லனுயென் ஸதென் ஹமவர
திலோகுரு முனிவர
.................................. ..............
என்று வரும் இச்செய்யுளில் விவரிக்கப்படும் புத்தகுணம் யாது?
(1) பஹாவா (2) ஸத்தா (3) புத்த
(4) ஸுகத (5) ஸம்மா ஸம்புத்த

9. "நத்தானந்த ததாகதஸ்ஸ தம்மெஸு ஆசரிய முட்டி" எனும் பரிநிப்பான சூத்திரத்தில் வரும் போதனை புத்தரின் ...................... இயல்பினை வெளிப்படுத்துகின்றது.
(1) மஹா ப்ரஞ்ஞா (2) தாதி குணம் (3) சுதந்திர சிந்தனை
(4) சிறந்த ஆசிரியர் (5) மிகவும் இரக்கமுடையவர் (மஹா கருணா)

10. 'படிபுஜ்ஜா வ்யாகரணீய' என்பது புத்தர் பயன்படுத்திய நடைமுறையொன்றாகும். அதனை .................. என்பதற்காகப் பயன்படுத்தினார்.
(1) விபரங்களுடன் தர்ம போதனை செய்தல்.
(2) சுருக்கமாகத் தர்ம போதனை செய்தல்
(3) தவறின்றி மொழியைப் பயன்படுத்தல்
(4) சிராவகர்களின் புத்திக்கு ஏற்றவகையில் போதனை செய்தல்
(5) வினாக்களுக்கு விடையளித்தல்

11. "உலகில் பிரசித்தமான சமயங்களில் பௌத்த சமயத்தை விரும்பியது குறிப்பாக முன்னைய புத்தமதம் எவரையுமே துன்புறுத்தக் கூடாது என்று போதித்தமையினாலாகும்."
மேற்கூறிய கூற்று யாரால் கூறப்பட்டதாகும்?
(1) பெர்ட்ரன்ட் ரஸல் (2) எட்வின் ஆர்னோல்ட்
(3) பேராசிரியர் ஸோண்டர்ஸ் (4) அல்பேட் ஐன்ஸ்டைன்
(5) பேராசிரியர் மக்ஸ்முல்லர்

12. கீழே தரப்பட்டுள்ளவை புத்தர் காலத்து பௌத்த உபாசிகை பற்றிய கூற்றுகள் சிலவாகும்
A - கோசல நாட்டு மன்னன் வினாவிய வினாக்களுக்கு சாதுரியமாகப் பதிலளித்தார்.
B - உண்மையான கதைகளைக் கூறும் மற்ற உபாசிகைகளுள் முதன்மையான பதவியைப் பெற்றார்.
C - திருமணத்தின்போது தந்தையார் கூறிய அறிவுரைகளைப் பின்பற்றினார்.
D - பதினாறு வருடங்களாக கிருஹஸ்த பிரம்மச்சாரியத்தைக் காப்பாற்றினார்.
E - தானம் வழங்குவதில் ஈடுபட்டிருந்த உபாஸிகைகளுக்குள் தலைமைப் பதவியைப் பெற்றார்.
இவற்றுள் விசாகா எனும் மகா உபாஸிகை பற்றிய சரியான கூற்றுகள் எவை?
(1) A, B (2) A, C (3) B, C
(4) C, D (5) C, E

13. ஒழுக்க விழுமியங்கள் பற்றிய பௌத்த போதனையின்படி வேண்டுமென்றே செய்யப்படும் செயற்பாடுகளின் ...................... செய்பவரைச் சென்றடையும்.
(1) பொறுப்பு
(2) சேதனா (இச்சை)
(3) ஸ்வச்சந்ததா (தன்னிஷ்டம்)
(4) ஸ்வாதீனத்துவம் (சுதந்திரம்)
(5) மதிப்பீடு

14. கீழே காட்டப்பட்டுள்ளவை அரச ஆட்சி தொடர்பான பௌத்த போதனைகள் பற்றிய ஐந்து கூற்றுகளாகும்
A - பணமற்றவர்களுக்குத் தாம் விரும்பும் கைத்தொழில் முதலானவற்றுக்கு பணம் கிடைக்க வழிசெய்தல்.
B - மணமான, மணமாகாத பெண்களுக்கான பாதுகாப்பினைக் கவனித்தல்
C - குற்றங்களைத் தடுத்தல்.
D - ஏற்படுத்தப்பட்டுள்ள சட்டங்கள் சீர்குலையாமல் பாதுகாத்தல்.
E - அறிஞர்களாயுள்ள பிராமணர்களிடத்து அறிவுரைகளையும் வழிகாட்டலையும் பெற்றுக் கொள்ளல்.
மேலே தரப்பட்டுள்ள கூற்றுகளுள் இரண்டு தஸஸக்விதிகளுக்குரியது**அல்லாத** விடயங்களைக் கொண்டுள்ளன. அவற்றைத் தெரிவுசெய்க.
(1) A, B (2) B, C (3) B, D
(4) C, D (5) D, E

15. அரசினது தோற்றம் பற்றிய அக்கஞ்ஞ சூத்திர போதனையின்படி ஆட்சியாளருக்கும் மக்களுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் முக்கியமான நிபந்தனையாகக் கொள்ளக் கூடியது,
(1) நெல் வயல்களின் உரிமையை ஆட்சியாளரிடம் ஒப்படைப்பது.
(2) பொதுமக்களின் சம்மதத்துடன் ஆட்சியாளரை நியமித்தல்.
(3) ஆட்சியாளருக்கு வரி செலுத்துவதற்கு பொதுமக்கள் ஏற்றுக் கொண்டமை.
(4) பொதுமக்களின் கருத்துக்களைக் கேட்காத ஆட்சியாளரை அகற்றும் அதிகாரம் மக்களுக்கு இருந்தமை.
(5) தஸராஜ தர்மத்திற்கமைவாக நிர்வாக முறைமையை மேற்கொள்ள ஒத்துக்கொண்டமை.

16. அத்தகார, பரகார, ஆரம்பஹதாது, நிக்கமதாது, பரக்கமதாது முதலான பரிபாஷைச் சொற்களின் மூலம் பௌத்த சமயம் வலியுறுத்தும் போதனைகளுடன் மிகவும் பொருந்தக் கூடிய கூற்று எது?
(1) செய்யப்பட்ட செயல்களின் விளைவுகளிலிருந்து விடுபட யாராலும் முடியாது.
(2) தனிப்பட்ட சுதந்திரத்தினாலும் முயற்சியினாலும் புருஷத்தன்மையை வளர்த்துக் கொள்ள முடியும்.
(3) மனிதன் என்பது காரண, காரிய தொடர்பின் பயனாலானது.
(4) தனது நன்மைக்காகவும் (ஆத்மார்த்தம்) பிறருடைய நன்மைக்காகவும் (பரார்த்த) ஒரே மாதிரியாகச் செயற்பட வேண்டும்.
(5) பயமூட்டும் சம்சாரத்தை வெற்றிகொள்வதற்கு இடைவிடாது செயற்படவேண்டும்.

17. புத்தர் காலத்தில் இந்தியாவில் நிலவிய சமயக் கருத்துக்கள் (வாதங்கள்) பல கீழே காட்டப்பட்டுள்ளன.
A - சங்சயவாதம்
B - அமரா விக்கேப வாதம்
C - புப்பேகதஹேது வாதம்
D - ஹேது பல வாதம்
E - ஈஸ்வர நிர்மாணவாதம்
இவற்றுள் தனிப்பட்ட சுதந்திரம், தனிப்பட்ட பொறுப்பு, தன்னிஷ்டம் (ஸ்வாதீனத்துவம், ஸ்வாமீத்துவம், ஸ்வச்சந்தா) ஆகியவற்றைப் பாதிக்கும் வகையில் அமைந்த போதனைகளை உள்ளடங்கியுள்ள இரண்டு விடையினைத் தெரிவுசெய்க.
(1) A, B (2) B, D (3) C, D
(4) C, E (5) D, E

[பக். 4 ஐப் பார்க்க

**18.** கீழ்க்காட்டப்பட்டுள்ள கூற்றுகளுள் நல்லது, கெட்டது என்பதனைத் தீர்மானிக்கும் பௌத்த நியமங்களுக்கு அமைவாக பயன்படுத்தக்கூடியதான மிகப் பொருத்தமானதைத் தெரிவுசெய்க.
(1) தனக்குத்தானே தீபமாகவும், விளக்காகவும் சரணமாகவும் கொண்டு வாழ்தல்
(2) ததாகதர்கள் வழிகாட்டுபவராவர். விமுக்தியை (விடுதலை) ஏற்படுத்துதல் உங்கள் பொறுப்பு.
(3) ததாகத தர்மம் திறந்து வைக்கும்போது நன்கு ஒளிவீசும்; மூடிவிட்டால் ஒளி வீசாது
(4) உடல், வாக்கு, மனம் என்பவற்றை நன்கு அடக்க வேண்டும்
(5) எந்த ஒரு செயல் பிற்போடப்பட வேண்டியதோ, கண்ணீர் வரக் கூடியவாறான விளைவை ஏற்படுத்துமோ அத்தகைய செயலைச் செய்யக்கூடாது

**19.** உணவுத் தட்டில் பரிமாறப்பட்ட உணவில் கூட ஒரு பங்கினை ஒரு பிராணியின் பசியைப் போக்கப் பயன்படுத்த முயற்சிக்கும் விதானே மாமா எல்லோரையும் இனிய வார்த்தையினால் அழைப்பதற்கும் குறைந்தது புன்சிரிப்புடனனாவது வரவேற்பதற்கும் பழகியிருந்தார். பஞ்சசீலத்தையும் போயா நாட்களில் அட்டசீலத்தையும் நன்கு காப்பாற்றி வந்தார். தனக்கு நன்கு தெரிந்த 'பண' புத்தகத்தை தன்னுடன் இருக்கும் உபாசகர்களதும் உபாசிகைகளினதும் நன்மைக்காக உரக்க வாசிப்பார். பெரியோர், சிறியோர் இளைஞர் வயோதிபர் ஏழை, பணக்காரர் எனும் வேறுபாடின்றி எல்லோருக்கும் வேண்டியதை வழங்கி எளிமையான, அழகாகவும் திருப்தியாகவும் தன் வாழ்க்கையைக் கழித்தார்.
மேலுள்ள முழுப் பகுதியின் கருத்தின்படி மிகச் சரியான கூற்றானது விதானே மாமா,
(1) நன்கு தானம் வழங்கினார்.
(2) இனிய முகத்துடன் மற்றவர்களை அழைத்தார்.
(3) மற்றவர்களது நன்மையைக் குறித்தே அர்ப்பணிப்புடன் இருந்தார்.
(4) உயர்ந்த தாழ்ந்த என்ற வேறுபாடின்றி நடந்து கொண்டார்.
(5) "சத்தர சங்கிரஹ வஸ்துவை" நன்கு செயற்படுத்தினார்.

**20.** கீழ்வரும் கூற்றுக்களில் பௌத்த போதனைக்கு அமைவாக வரும் **தவறான** கூற்றைத் தெரிவுசெய்க.?
(1) சட்டத்தை மதிப்பதனைப்புத்தசமயம் அபரிஹானீய தர்மமொன்றாகக் காட்டுகின்றது
(2) சமூக இருப்பிற்காக சட்டத்தை மதிக்க வேண்டியதன் தேவையானது விஹாபதத்தை (சிக்சாபத) தோற்றுவிப்பதனைக் குறிக்கோளாகக் கொள்வது தெளிவாகின்றது.
(3) குற்றத்தைத் தடுப்பதற்கு தண்டனை மட்டும்தான் ஒரே வழி என்பதைப் புத்தசமயம் ஏற்கவில்லை
(4) குற்றங்களுக்கான காரணத்தைத் தேடுவதில் காலத்தைக் கடத்தாது அவற்றை தடுக்க வேண்டும்.
(5) சமூகம் சம்மதித்துள்ள சட்டத்தை மீறலாகாது.

**21.** கீழ்வருவனவற்றுள் தசகுசலங்களுக்குள் அடங்கியுள்ள ஒரு கூற்றினைத் தெரிவுசெய்க.
(1) பொய் பேசாதிருத்தலும் கோள் சொல்லாதிருத்தலும்
(2) தானமும் சீலமும்
(3) புண்ணியம் செய்தலும் புண்ணிய காரியங்களில் பங்கேற்றலும்
(4) கிரியை செய்தலும் வழிபாடு இயற்றலும்
(5) 'பண' ஓதுதலும் 'பண' கேட்டலும்

**22.** செல்வத்தை நிர்வகித்தல் பற்றி விபரிக்கும் பௌத்த போதனையொன்றாகப் பெரிதும் மதிக்கத் தக்கது ......................... பற்றிய போதனையாகும்
(1) பஞ்ச பலி (2) ஸமஜீவிகதா (3) அபாய முக
(4) போக சுக (5) ஸம்மா ஆஜீவ

**23.** பௌத்த போதனையின்படி ஒருவரின் பொருளாதாரச் செழிப்புக்கு உழைப்பின் முக்கியத்துவத்தினை விபரிக்கும் போதனையொன்றாகக் கருதக் கூடியது ....................... என்பதாகும்.
(1) "அசரித்வா ப்ரஹ்மசரியங் அலத்தா யொப்பனே தனங்"
(2) "உட்டானவத்தோ ஸதிமதோ ஸுவிம்மஸ்ஸ நிஸம்மகாரினோ"
(3) "பாஹாபல பரிசிதேஹி ஸேதா வக்கித்தேஹி தம்மிகேஹி தம்மலத்தெஹி போகேஹி"
(4) "ந இச்ஜேய்ய அதம்மென ஸமித்திமத்தனொ"
(5) "அனவஜ்ஜானி கம்மானி"

**24.** புத்தர் ஆக்கத்திறனுடைய அழகியலுக்கு முக்கியத்துவமளித்ததைக் காட்டும் சூத்திரமாவது,
(1) ஆட்டா நாடிய சூத்திரம் ஆகும். (2) தனிய சூத்திரம ஆகும்.
(3) ஸக்கபஜ்ஹ சூத்திரம் ஆகும். (4) அரிய பரியேஸன சூத்திரம் ஆகும்.
(5) மஹாபரிநிப்பான சூத்திரம் ஆகும்.

**25.** சுற்றாடல் பற்றிய புத்தசமயக் கருத்துக்களை விளக்கும் கூற்றுகள் சில கீழே காட்டப்பட்டுள்ளன.
A - பூந்தோட்டம் செய்தலும் வனவளர்ப்பும் இரவு பகலாகப் புண்ணியத்தை வளர்க்கும் செயலாகும்.
B - நீரில் மலசலம் கழித்தல், துப்புதல், பிக்குகளுக்குக் குற்றமாகின்றன.
C - வனத்தை (கிலேச) அழிக்காதே, மரத்தை வெட்டாதே என்பது பிரசித்தமான பௌத்த போதனையாகும்.
D - பச்சை பசேலென்றுள்ள புல்லின்மீது மலசலம் கழித்தல், துப்புதல் என்பன பிக்குகள் செய்யக் கூடாதவையாகும்.
E - மரங்கள், செடிகளை வெட்டுதல், பலவகையான வளரும் விதைகளை அழித்தல் என்பன பிக்குகள் செய்யக்கூடாதவையாகும்.

மேற்குறிப்பிட்ட கூற்றுகளுள் சுற்றாடலைப் பாதுகாப்பதற்கு ஊக்கமளிக்கும் வகையிலான மிகச் சரியான கூற்றினைத் தெரிவுசெய்க.
(1) A மட்டும் (2) A, B மட்டும் (3) A, B, C மட்டும்
(4) A, B, C , D மட்டும் (5) A, B. C , D, E ஆகிய ஐந்தும்

**26.** அகடீதோ, அமுச்ஜிதோ அனஜ்ஞாபன்னொ, ஆதீனவ தஸ்ஸாவி,நிஸ்ஸரண பஜ்ஜா ஆகிய பரிபாஷைச் சொற்கள் செல்வத்தினை பற்றியதத்துவ விளக்கம் தருபவையாகும்
(1) சம்பாதித்தல் (2) நுகர்தல் (3) சேமித்தல் (4) முதலீடு செய்தல் (5) நிர்வகித்தல்

**27.** பாபா நிவாரென்தி என்பது பாவத்தைச் செய்யாதிருத்தல் என்பதாகும். ஸிகாலோவாத சூத்திதின்படி பாவத்திலிருந்து விடுபடுதல் மிக அவசியமானதாகக் காட்டப்பட்டிருப்பது,
(1) பிராமணர்களுக்கும் பெற்றோர்களுக்கும்
(2) பிராமணர்களுக்கும் ஆசிரியர்களுக்கும்
(3) பிராமணர்களுக்கும் நண்பர்களுக்கும்
(4) பெற்றோர்களுக்கும் ஆசிரியர்களுக்கும்
(5) பெற்றோர்களுக்கும் நண்பர்களுக்கும்

**28.** பொருளாதாரச் செழிப்பை எதிர்பார்க்கும் பௌத்த கிருஹஸ்தர் பொருளாதாரத்தைக் காப்பதற்காக போகங்களை அழிக்கக் கூடாது என ஸிகாலோவாத சூத்திரம் எடுத்துக் காட்டுகின்றது. போகத்தை அழிப்பதற்காக நேராகவோ அல்லது மறைமுகமாகவோ ஏற்படும் காரணங்கள் கீழே காட்டப்பட்டுள்ளன. அவற்றுள் போக அழிப்பாக ஸிகாலோவாத சூத்திரம் **காட்டாத** ஐந்து விடயம் யாது?
(1) மதுபானம் குடித்தல்
(2) கெட்ட நண்பர்களுடன் சகவாசம் வைத்திருத்தல்
(3) சோம்பல்
(4) பிறர் மனை விரும்புதல்
(5) சூதாட்டம்

**29.** 'ஜினா கதரியங் தானேன' எனும் தம்மபத செய்யுள் அடியின் கருத்தாவது, தானத்தினை வழங்கி .......................... வெல்லப்பட வேண்டியது
(1) பகைவன் (2) உலோபி (3) பரலோகம்
(4) நிர்வானம் (5) அனைத்துமே

**30.** 'அனாகுலா ச கம்மன்னா' எனும் மங்கல சூத்திர செய்யுளின் கருத்தாவது,
(1) செய்யக்கூடாத தொழில்களில் ஈடுபடக்கூடாது.
(2) செய்யக்கூடாத வர்த்தகங்களைச் செய்யக்கூடாது.
(3) குலவேறுபாடு பார்க்காது செயற்படல்.
(4) சமயம் சார்ந்த வாழ்க்கையைக் கைக்கொள்ளல்.
(5) நல்ல தொழிலை உடையவராயிருத்தல்.

**31.** புத்தருக்குப் வழங்கப்பட்ட சில ஆராமங்களின் பெயர்கள் கீழே காட்டப்பட்டுள்ளன. அத்தகைய ஆராமப் பெயர்களின் எதிரில் காட்டப்பட்டுள்ள ஆராம பூசை வழங்குநர்களுள் இருவரது பெயர்கள் மட்டும் சரியாயுள்ளன.
A - நிக்ரோதாராம - கபிலவஸ்துபுர சாக்கியர்
B - ராஜகாராம - அநேபிண்டு செட்டி
C - ஜேதவனாராம - ஜேத இளவரசர்
D - பூர்வாராம - விசாகா உபாசிகா
E - வேலுவனாராம - கோசல மன்னன்

பொருத்தமான சோடியைத் தெரிவுசெய்க
(1) A, B (2) A, C (3) A, D
(4) C, D (5) C, E

[பக். 6 ஐப் பார்க்க

**32.** பௌத்த மகாநாடு நடாத்தப்படக் காரணமாயிருந்த சில விடயங்கள் கீழே காட்டப்பட்டுள்ளன,
(A) சுபத்ரரின் ஒழுக்கமற்ற வார்த்தைகள்
(B) வஜ்ஜிபுத்தக பிக்குகளின் பத்துக் குறிப்புக்கள்
(C) சிதறிக் கிடந்த தர்ம ஒழுக்கங்களை ஒன்றுபடுத்தல்
(D) தீய செயல்களையுடைய பிக்குகள் சங்கத்தில் நுழைந்தமை
(E) புத்தரது வார்த்தைகளை பலவாறு விளக்கியமை.
மேற்சொன்ன விடயங்களுள் முதலாவது பௌத்த மகாநாடு நிகழ்வதற்கக் காரணமாயமைந்த இரண்டு விடயங்களைத் தெரிவுசெய்க
(1) A, B (2) A, C (3) C, D
(4) C, E (5) D, E

**33.** நாலந்தாப் பல்கலைக் கழகத்தின் கல்வி நடவடிக்கைகள் முக்கியமான ஐந்து பாட ஓட்டங்களின் (stream) கீழ் நடைபெற்றன. அவற்றுள் புத்த தர்மம் ஒன்றாகும். அந்த பாடமுறைமையில் முக்கிய நோக்கமாக சொல்லக்கூடியது .................... போதனையாகும்.
(1) முன்னைய பௌத்த (2) தேரவாத புத்த மத (3) அபிதர்ம
(4) மஹாயான சமய (5) ஸர்வாஸ்திக வாத

**34.** இரண்டாவது பௌத்த மகாநாடு நடப்பதற்கு முன்னர் குழுவொன்று (கமிட்டி) நியமிக்கப்பட்டது,
(1) மகாநாட்டிற்காக பிக்குகளைத் தேர்ந்தெடுப்பதற்காகவாகும்.
(2) தசவஸ்துவினை (பத்துக் குறிப்புக்களை) நியாயப்படுத்துவதற்காகும்.
(3) தசவஸ்துவினை ஏற்றுக்கொண்ட பிக்குகளை அடையாளம் காண்பதற்காகும்.
(4) மகாநாட்டை ஒழுங்குபடுத்துவதற்காகும்.
(5) தசவஸ்துவை ஏற்றுக்கொண்டுள்ள பிக்குகளைத் தண்டிப்பதற்காகும்.

**35.** மூன்றாவது பௌத்த மகாநாட்டின் பின்னர் மொக்கலீபுத்ததிஸ்ஸ தேரரினால் கதாவத்துப்பரகரணம் தொகுக்கப்பட்டது. அதனது முக்கியத்துவத்தின் விளைவாகக் கருதப்படக் கூடியது.
(1) தேரவாத அபிதர்ம பிடகம் பூரணமானமை
(2) தேரவாத பௌத்தமதம் பாதுகாக்கப்பட்டமை
(3) விநய பிடகம் நிறைவானமை
(4) சூத்திரபிடகம் நிறைவானமை
(5) தேரவாதம் வேற்று நாடுகளுக்குப் பரவியமை

**36.** புத்தர் காலத்து இந்தியாவில் சமயப் பிசாரத்தின்போது சிராவகர்களது செயற்பாடுகளை மதிப்பிடுவதற்கு சிறந்த உதாரணமாகக் கொள்ளக்கூடிய வகையில் ஸூனாபரந்த எனும் குடியேற்றத்தில் சமயப் பரம்பல் மேற்கொண்டவராக இருந்த வண.சிராவகரானவர்,
(1) புண்ண தேரர் ஆவார். (2) சாரிபுத்த தேரர் ஆவார்.
(3) முகலன் தேரர் ஆவார். (4) மஹாகாஷ்யப தேரர் ஆவார்.
(5) பக்குல தேரர் ஆவார்.

**37.** பலவித நம்பிக்கைளுக்கும் விசுவாசங்களுக்கும் ஆதரவளித்த பண்டுகாபய மன்னன் யக்ஷ வணக்கத்திற்கு விஷேஷ கவனிப்பைக் காட்டினான் என மகாவம்சத்தின் மூலம் தெரிய வருகின்றது. அதற்கமைவாக அரசனால் கண்டிக்குக் கிழக்குப் பக்கத்தில் தேவாலயம் ஒன்று அமைக்கப்பட்டமை யாருக்காகவாகும்?
(1) சித்த ராஜ (2) வைசிரவண (3) வலவாமுகீ
(4) ஜூதின்தர (5) காலவேல

**38.** வரலாற்றுச் செய்தியின்படி சைத்திய கிரியில் அறுபத்தெட்டு குகைகளை அமைத்து பிக்குகளுக்குக் கொடுத்தவர் .......................... மன்னன் ஆவார்
(1) தேவநம்பிய திஸ்ஸ (2) வலகம்பா (3) துட்டகமுனு
(4) ஸத்தா திஸ்ஸ (5) நான்காம் மிகிந்து

**39.** அரிட்ட தேரரின் தலைமையில் மஹாவிஹார சுற்றுப்புறத்தினுள் ஒழுக்க (விநய) மகாநாடு நடாத்தப்பட்டதன் பிரதானமான நோக்கமானது
(1) ஒழுக்கதர்மத்தின் ஆயுளின்படி கவனம் செலுத்துதல்
(2) மகாவிகாரைக்கு ஏற்பட்ட பலவித எதிர்ப்புகளைத் தடைசெய்தல்
(3) இலங்கைத்தீவில் புத்தசமயத்தை நிலைநாட்டுதல்
(4) ஒழுக்கம் பற்றி நிலவிய தவறான விளக்கங்களை விலக்குதல்
(5) அழிவிற்கு இலக்காகிக் கொண்டிருந்த பிக்குகளின் ஒழுக்க விழுமியத்தை மீண்டும் நிலைநாட்டுதல்

**40.** புத்தமதம் அறிமுகப்படுத்தப்பட்டதுடன் இலங்கையில் நிலவிய நம்பிக்கை, விஸ்வாசங்களில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்பட்டது. அது தொடர்பான நான்கு கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.
A - எல்லா நம்பிக்கைகளும், விஸ்வாசங்களும் முழுவதுமாக நீக்கப்பட்டன.
B - பல நம்பிக்கைகளுக்கும், விஸ்வாசங்களுக்கும் புதிய விளக்கங்கள் உண்டாயின
C - சில நம்பிக்கைளும், விஸ்வாசங்களும் முற்றாக இல்லாதொழிந்தன
D - சில நம்பிக்கைகள், விஸ்வாசங்கள் புத்தமதத்தின் கண்டனத்திற்குள்ளாயின
மேற்காட்டப்பட்டுள்ள கூற்றுகளுள் உள்நாட்டு நம்பிக்கைகள், விஸ்வாசங்களில் ஏற்பட்ட மாற்றங்களைக் காட்டக்கூடிய மிகப் பொருத்தமான **இரண்டு** கூற்றுக்களைத் தெரிவுசெய்க.
(1) A, B (2) A, D (3) B, C (4) B, D (5) C, D

**41.** மக்களை கவர்வதற்காக அபயகிரி மரபினர் கடைப்பிடித்த செயற்பாடுகள் **அல்லாத** விடயங்களாகக் கூறக் கூடியது ............................ ஆரம்பித்தமையாகும்.
(1) பிண்டபாத முறையினை (பிச்சையேற்றல்)
(2) பூஜாவிதியினை (பூசை முறைகளைச் செய்தல்)
(3) பெரஹரவினை (ஊர்வலமாகப் போதல்)
(4) தாது பிரதர்ஷனத்தினை (புனிதப் பொருளைக் காட்டல்)
(5) பிரித் ஓதுதலை உபதேசித்தல்

**42.** மகாவிகாரை, கல்வி நிலையமொன்று என்ற வகையில் சர்வதேச ரீதியில் பெரும் புகழினை பெற்றுள்ளமையினை பல மூலாதாரச் செய்திகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை நிரூபிக்கத் தக்கவகையில் காண்பிக்கக் கூடிய மிகவும் பொருத்தமான காரணி யாது?
(1) நாடுநாடாகச் செல்பவர்களின் பிரயாணச் செய்திகளில் மகாவிகாரை பற்றிய வர்ணனையைக் கொண்ட செய்திகள் உள்ளடக்கப்பட்டுள்ளமை
(2) மகாவிகாரை தேரவாத மரபின் மத்திய நிலையமாக இருந்தமை
(3) மகாவிகாரைப் பிக்குகள் வெளிநாடுகளிலும் கூட சமயப் பிரசாரத்தில் ஈடுபட்டமை
(4) வெளிநாட்டு மாணவர்களும் அறிஞர்களும் மகாவிகாரைக்கு வந்து கற்றல், ஆராய்ச்சி என்பவற்றில் ஈடுபட்டமை
(5) மகாவிகாரை, சர்வதேசப் புகழ்வாய்ந்த நூல்களை உருவாக்கி வெளியிட்டமை

**43.** புத்தமதம் அறிமுகப்படுத்தப்பட்ட நாடுகளில் ஒப்பீட்டளவில் மியன்மார் சமூகத்தினரிடையே நிகழ்ந்த சிறப்பான வேறுபாடாகக் கருதப்படக்கூடியது,
(1) புத்தமதம் அரச சமயமாக ஸ்தாபிக்கப்பட்டமை.
(2) பாளி திரிபிடகத்தினை தமது மொழிக்கு (பர்மிய) மொழி பெயர்த்தமை
(3) நிலவிவந்த சமய நம்பிக்கைகள் முழுவதுமாகப் புறந்தள்ளப்பட்டமை
(4) சாதிவேறுபாடுகளைப் பாராது செயற்பட்டமை
(5) தற்காலிகமாகச் சமய வசப்படுகையைச் செயற்படுத்தியமை

**44.** தாய்லாந்தில் புத்தசமயம் அறிமுகமானமை, அதன் பரம்பல் பற்றிய **தவறான** கூற்றினைத் தெரிவுசெய்க
(1) கி.மு. 329 இல் நகொம்பதோம் நகரைச் சுற்றியுள்ள பகுதியில் புத்தசமயப் பரம்பல் நிலவியமை வரலாற்று ரீதியாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றது
(2) புத்தர் வாழ்ந்தபோதே இந்திய-தாய் வர்த்தகத் தொடர்பினால் தாய்லாந்தில் பௌத்த சமயம் பரவியது
(3) கி.பி.700 அளவில் பலம்பான் அரசனின் அனுசரணையுடன் மகாயான புத்தசமயம் பரவிற்று
(4) கி.பி.7ம் நூற்றாண்டில் த்வாரவதீ (தாய்லாந்திற்குரிய ஒரு பிரதேசம்) யில் புத்தசமயம் செழிப்புடன் விளங்கிற்று.
(5) கி.பி.11 ம் நூற்றாண்டில் பர்மா நாட்டு ஆட்சியாளரான அனௌரத மன்னின் அனுசரணையுடன் தாய்லாந்தில் புத்தசமயம் பரவியது.

**45.** வரலாற்று ஆதாரத்தின்படி கி.பி 250 இல் இந்தியாவிலிருந்து சீனாவிற்குச் சென்று ஒழுக்கச் செயற்பாட்டிற்கான வெள்ளை அஷ்வாராமாவில் சீமா மாலக ஒன்றை அமைத்து இங்கு பிக்கு சாசனத்தை ................ தேரர் ஆரம்பித்து வைத்தார்.
(1) குமாரஜீவ
(2) காஷ்யப மாதங்க
(3) தர்மரக்ஷ
(4) போதிதர்ம
(5) ஸங்கவர்மன்

**46.** யப்பானிய மக்கள் பௌத்த முறைமைக்கமைவாக வெகு விமரிசையாக வருடாந்தம் கொண்டாடப்படும் இறந்தவர்களுக்கு சமர்ப்பணம் செய்யும் விழாவானது ............................... என்று அழைக்கப்படும்
(1) பொன் (2) ஜோதோஏ
(3) நெஹங்ஏ (4) ஹனமத்ஸுரி
(5) சானொயி

**47.** ஒவ்வொரு புத்த சிலையும் ஏதாவதொரு செய்தியை வெளிப்படுத்தும் வகையிலான முத்திரையைக் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளது. அதன்படி இந்தியாவில் பிரசித்தி பெற்ற சாராநாத் புத்தர் சிலை அமைக்கப்பட்டிருப்பது
(1) அபய முத்திரையுடன் (2) விதர்க முத்திரையுடன்
(3) பூமிஸ்பர்ஷ முத்திரையுடன் (4) வரத முத்திரையுடன்
(5) தர்மசக்ர முத்திரையுடன்

**48.** அனுராதபுரக் காலத்தில் அமைக்கப்பட்ட இலங்கைக்கான சந்திரவட்டக்கல் பொலன்னறுவை, கண்டிக் காலங்களில் குறிப்பிடத்தக்க மாற்றங்களுக்குள்ளாகியுள்ளது. அங்கு ஏற்படுத்தப்பட்ட மாற்றங்கள் சில கீழே காட்டப்பட்டுள்ளன.
A - பிராணிகளை வேறுவேறாக வரிசைகளில் காட்டுதல்
B - சந்திரவட்டக்கல் அளவில் பெரிதாகியுள்ளமை
C - அரைத் தாமரை முழு(பூரண)த் தாமரையாக அமைந்துள்ளமை.
D - சந்திரவட்டக்கல் பிறைச் சந்திர வடிவத்திலிருந்து முக்கோண வடிவில் அமைந்துள்ளமை.
E - பிராணிகளின் வடிவங்களில் எருதினை விலக்கியிருத்தல்
மேற்குறிப்பிடப்பட்டுள்ள மாற்றங்களுள் கண்டிக் காலத்திற்குரிய சந்திரவட்டக்கல்லில் காணக்கிடைக்கும் இரண்டு விஷேடத் தன்மைகளைக் கொண்டுள்ள தெரிவு
(1) A, B (2) A, C (3) B, D (4) C, D (5) D, E

**49.** மேல் மாடியுடன் கட்டப்பட்ட சிலை வீட்டு அமைப்பு ............................ என்று அழைக்கப்படுகின்றது.
(1) கந்தகுடி (2) கெடிகே (3) பாஸாத
(4) படிமாகார (5) பஞ்சாயதன

**50.** இலங்கைக்கான பௌத்த ஓவியக்கலை பௌத்த ஒழுக்கங்களை (சாரதர்ம) எடுத்துக்கூறுவதில் சிறப்பான பங்கை ஆற்றியுள்ளது. அத்தகையதொரு ஓவியம் காணப்படும் அனுராதபுரக் காலத்திற்குரிய இடமாகக் கருதப்படுவது,
(1) மஹியங்கன ஸ்தூபம் (2) ஹிந்தகல (3) புல்லிகொட
(4) திவங்கச் சிலைவீடு (5) தம்புள்ள

* * *

(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2020
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2020
General Certificate of Education (Adv. Level) Examination, 2020

බෞද්ධ ශිෂ්ටාචාරය II
பௌத்த நாகரிகம் II
Buddhist Civilization II

45 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இலிருந்து எவையேனும் **இரண்டு** வினாக்களையும், பகுதி **II** இலிருந்து எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் வீதம் வழங்கப்படும்.

## பகுதி I

**1.** (i) வைசிய வருணத்தாருக்கரிய ஸ்வதர்மங்கள் **நான்கினைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) சிரமண (சமண) கலாசாரத்தின் தனிப்பட்ட லட்சணங்கள் **மூன்று** தருக. (03 புள்ளிகள்)

(iii) பெண்களது சுதந்திரத்திற்காக பௌத்த சமயம் எடுத்த முயற்சிகள் **நான்கினை** முன்வைக்குக. (04 புள்ளிகள்)

(iv) புத்தர் காலத்து இந்திய சமூகமானது வர்த்தக மயப்படுத்தப்பட்டதாக இருந்ததைக் காட்டும் சான்றுகள் **ஐந்தினை** சுருக்கமாக அறிமுகம்செய்க. (05 புள்ளிகள்)

(v) அஜித கேஸகம்பலரின் சமய போதனையின் ஊடாக நல்லொழுக்கத்திற்கு ஏற்படும் பாதிப்புக்களை தெளிவுபடுத்துக. (06 புள்ளிகள்)

**2.** (i) புத்தர் 'அரஹங்' எனும் பெயரினால் அழைக்கப்படுவதற்குக் காரணமாயுள்ள சான்றுகள் **இரண்டினைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) புத்தரின் 'த்ரிவித்யா ஞான' த்தைப் பெயரிடுவதுடன் அதன் கருத்தையும் எழுதுக. (03 புள்ளிகள்)

(iii) புத்தர் சிறந்ததொரு போதனையாளர் என்று சிறப்பிக்கப்படுவதற்கான சான்றுகள் **நான்கினை** எடுத்துக் காட்டுக. (04 புள்ளிகள்)

(iv) ஆனந்த தேரரிடமிருந்த குண இயல்புகளின் மூலம் கிடைக்கக்கூடிய **நான்கு** முன் மாதிரிகளை தெளிவுபடுத்துக. (05 புள்ளிகள்)

(v) விருப்பங்களிலிருந்து விடுபட்ட இயல்பினைக் கொண்ட உத்தமர்கள் இயற்கை அழகினை அனுபவித்த விதத்தினை மூலாதாரங்கள் **நான்கினை** அடிப்படையாகக் கொண்டு விபரிக்குக. (06 புள்ளிகள்)

3. (i) "ந பஜே பாபகெ மித்தே" எனும் தம்மபத செய்யுளைச் சரியாகப் பூரணப்படுத்துக. (02 புள்ளிகள்)

(ii) அச்செய்யுளின் கருத்தை எழுதிக் காட்டுக. (03 புள்ளிகள்)

(iii) தாய் தந்தையர், பிள்ளைகள் ஆகியோரின் கடமைகள், பொறுப்புகள் பத்தினை சிகாலோவாக சூத்திரத்திற்கமைவாகப் பெயரிடுக. (04 புள்ளிகள்)

(iv) தனிப்பட்ட ஒருவரின் அழிவிற்குக் காரணமாகும் பராபவ சூத்திரத்தில் வரும் **ஐந்து** விடயங்களை விளக்குக. (05 புள்ளிகள்)

(v) தனிப்பட்ட ஒருவரது இவ்வுலக முன்னேற்றத்திற்குக் காரணமான மங்கல சூத்திரத்தில் வரும் **ஆறு** விடயங்களைச் சுருக்கமாக விபரிக்குக. (06 புள்ளிகள்)

## பகுதி II

4. (i) நால்வருணத் தோற்றமானது பௌத்த பிரிவான நிர்மாணவாதக் கொள்கைகளினால் விலக்கப்படும் விதத்தினை தெளிவுபடுத்துக. (10 புள்ளிகள்)

(ii) அரச பரிபாலன முறையில் நல்லாட்சி விடயத்தில் மக்களின் பொறுப்பு என்ன என்பதை பௌத்த போதனையின் அடிப்படையில் எடுத்துக்காட்டுக. (10 புள்ளிகள்)

5. (i) நல்ல-கெட்ட செயல்களைத் தாமே முடிவெடுக்கக் கூடியதாயுள்ளதனை பௌத்த ஒழுக்க நிர்ணயத்தின் அடிப்படையில் விளக்குக. (10 புள்ளிகள்)

(ii) தற்கால சமூகப் பிரச்சினைகளுக்கு மத்தியில் எளிய வாழ்க்கை நடாத்துவதன் செயற்பாட்டு முக்கியத்துவத்தினை பௌத்த மத கருத்தினை அடிப்படையாகக் கொண்டு எடுத்துக்காட்டுக. (10 புள்ளிகள்)

6. (i) தற்போதைய சுற்றுச் சூழல் சம்பந்தமான பிரச்சினைகளைக் குறைக்குமிடத்து சூழல் பாதுகாப்பு பற்றிய பௌத்த போதனைகளைப் பயன்படுத்தக்கூடிய விதத்தினை பரிசீலிக்குக. (10 புள்ளிகள்)

(ii) "பொருளாதாரச் செழிப்பானது திருப்தியானதொரு இல்லற வாழ்க்கைக்கு மிக அவசியமானதொன்றாகும்." பணம் ஈட்டும் வகை பற்றிய பௌத்த போதனைக்கமைவாக இதனை நிரூபிக்குக. (10 புள்ளிகள்)

7. (i) முதலாவது பௌத்த மாநாட்டின் பின்புலம் பற்றி சுருக்கமாக எடுத்துக் கூறி பௌத்த மதத்தின் நீண்டகால இருப்புக்கு அங்கு எடுக்கப்பட்ட தீர்மானத்தை தெளிவுபடுத்துக. (10 புள்ளிகள்)

(ii) தர்மாசோக அரசன் பௌத்த சமயத்துக்கு ஆற்றிய பணிகளை தகுந்த ஆதாரங்களுடன் மதிப்பிடுக. (10 புள்ளிகள்)

8. (i) புராதன இலங்கையின் ஆட்சியைப் பொறுத்த வகையில் பௌத்த மதம் எவ்வளவு தூரம் செல்வாக்கு செலுத்தியது என்பதனை உதாரணங்களுடன் விளக்குக. (10 புள்ளிகள்)

(ii) புத்தசிலை வடிவமைப்பின் ஆரம்பத்தினைச் சுருக்கமாக எடுத்துக் கூறுவதுடன் அவற்றுள் பயன்படுத்தப்பட்ட அமர்ந்து இருக்கும் வடிவங்கள் பற்றியும் முத்திரைகள் பற்றியும் உதாரணத்துடன் விளக்குக. (10 புள்ளிகள்)

* * *